உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

“ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு”

| மலர் சு | ஆங்கீரச ஆண்டு மாசித் திங்கள்<br>1933 ௵ பிப்ரவரி ௴ | இதழ் உ |
|---|---|---|

சைவசித்தாந்த மகா சமாஜம்

## 4-வது சைவ இளைஞர் கூட்டம்

(திருவிற்கோலம்—31-12-32)

தலைவர் - திருவாளர் - தி. கு. கி. நாராயணசாமி நாயடு அவர்கள்

திருச்சிற்றம்பலம்

“இளமை கைவிட் டகறலு மூப்பினுர்
வளமை போய்ப்பிணி யோடு வருதலால்
உளமெ லாம்ஒளி யாய்மதி யாயினுன்
கிளமை யேகிளை யாக நினைப்பனே.”—அப்பர்.

திருச்சிற்றம்பலம்

**தோழர்களே!**

ஈண்டுக் குழுமியுள்ள சைவ இளைஞர் கூட்டத்திற்குத் தலைமை வகிக்கப் பணித்த வரவேற்புக் கழகத்தார்க்கும், ஏனைய கெழுதகை நண்பர்கட்கும் எனது நன்றி யறிதலான வணக்கம். அடியேன் இளையன்; குணம் பொல்லேன்; குற்றமே பெரிதுடையேன். குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதும் நுங்கள் கொள்கை கண்டு சிறியனேன் இக்கூட்டத்துக்குத் தலைமைபூண இசைந்தேன். ஆகவே என்மாட்டு நிகழும் துரிசுகளைப் பொறுத்தருளுமாறு வேண்டுகிறேன்.

அறமறக் கிளர்ச்சிகள் வீறிட்டு நிலவும் இந்நாளில், இக்கூட்டம் தொண்டை நாட்டு எண்ணான்கு பதிகளில் பதினான்காம் பதியும், சைவக்

கன்றின் கைகண்ட தமிழ் மறையும், சிவப்பிரகாசக் கற்பனையும், விற்கோலம், கூவம் என்னும் வழக்குமுடைய இத்தலத்தில் இம்முறை ஈண்டியிருக்கிறது. இவண் இறைவன் நல்லதிசயனுய் - உமையொருபங்கனுய் - மூவருண் முதல்வனுய் - புரங்கள் வெந்தற விற்கோலச் சேவகனுய், செல்வம் அருளி, மறையங்கம் தொகுத்து, ஆகமம் வகுத்து வீற்றிருப்பதைச் சிந்தித்து வந்தித்து என் பணி மேற் செல்கின்றேன்.

இளைஞர் இயக்கம் சைவ உலகுக்குப் புதியதன்று. பிள்ளை சைவவான் பயிர் ஓம்பினர். நம்பி அதன் களை களைந்தார். இளைஞர் சாத்திரம் வகுத்துச் சைவநாதரானர். கண்ணப்பர் பணியும் தந்தை தாளற வெறிந்தார் பரிசும் இளைஞர் திறன்களே. அப்பூதியடிகள் தொண்டுக்கும் சிறுத்தொண்டர் தொழிலுக்கும் துணை செய்தவர் சைவச் செம்மல்களேயாவர். இன்னோன்ன வரலாறுகளில் சைவம் சாதியாக நிலவாது செந்நெறிச் சமயமாக நாட்டில் நிலவி, மறந்தரு நீநெறி மாற்றி, வாய்மை நெறி அறந்தர விளங்கியது கருதற்பாலது. சேரக் கருதிச் சிந்தனையைத் திருந்த வைத்துச் சிந்திமின்! இவ்வியக்கம் சமய இயக்கமென்று தெளிமின்! சாதி யியக்கமென்பதை விடுமின்!

## சிவன் - சைவம் - சைவர்

சிவனெனும் நாமமுடைய செம்மேனியெம்மான் முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருள்; பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியன்; தென்னுடையவன்; எந்நாட்டவர்க்கும் இறைவன்; மனவாசகங் கடந்தவன்; மாதிருக்கும் பாதியன்; குறைவிலா நிறைவன்; கோதிலாவமுதன்; ஈறிலாப்பதங்கள் யாவையுங் கடந்த இன்பன்; அன்பன். இவ்வன்புச் சிவத்தொடு சிவணியது சைவம். இஃது, 'இதுவாகும் அது வல்லவெனும் பிணக்க தின்றி நீதியினல் எல்லாம்' தன்னகத்தே காணும் அழகியது. வாழ்வெனும் மையல் விட்டு, வறுமையாம் சிறுமை தப்பி, தாழ்வெனுந் தன்மையாலே இதில் சார்வார் சைவர். எந்நிலையில் நின்றாலும், எக்கோலம் கொண்டாலும் சங்கரன் தாள் மறவாமை இவர் தம் இயல்; பணி செய்து கிடப்பதே இவர் தம் கடன். இவர்கள் காலைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே, அவன் அருட்பெருங் கடலில் தோய்ந்து திளைத்து, 'இருள் கடிந்துள்ளத் தெழுகின்ற ஞாயிறே! போனந்தம் போது வைக்கும் பெருமானே!' என்று என்பு நைந்துருகத் தழலது கண்ட மெழுகது போல அன்பாலழுது அரற்றி அர்ச்சனைப் பாட்டேயாகப் பாடிப் பசி தீர்ந்து பாவிப் பிணி களைந்து எவ்வுயிர்க்கும் அன்பாயிருக்கும் அன்பர்கள்; தங்கள் நிலையினின்றும் கலங்காத் திண்ணியர்கள். இவற்றால் நம்மை அறிந்து நமது கடமைகளை ஆற்றுதற்குரிய துணை நலங்களை மேல் ஆய்வாம்.

## உடலோம்பல்

உறுதுணையாவன உயிரும் உடம்பும் இவற்றுள் உடலை வளர்க்க உயிரும் வளர்தலின், உடல், உயிரின் நிலை காட்டும் ஆடியென்க. உடல் கொண்டு திறம்பட மெய்ஞ்ஞானம் சேர்கின்ற மாண்பை ஓர்ந்து, உட

லமைப்பை வியந்து, 'ஊன் உடம்பு ஆலயம்' என்றும், 'மநியின் பெருவலி மானுடர் வாழ்க்கை' என்றும் திருமூலர் சிறப்பித்தனர். அவரே சிவலிங்கம், சிதம்பரம், சதாசிவம், திருக் கூத்து யாக்கை வடிவென்று அமைப் பழகை வியந்தோதினர். மனத்துயர் ஒழிய ஈகை வினைத்துறை நின்ற துறவி - நம் குரவர், 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்றும், 'வாய்த்தது நந்தமக்கு ஈதோ பிறவி மதித்திடுமின்!' என்றும் அருளி யதை ஈண்டு நோக்குங்கள்! தொண்டர்கள் வரலாற்றில் போந்த காளை களின் கவினும், கன்னிமார் வனப்பும் உடற் கட்டழகை அறிவிப்பன வல்லவோ? அதில் காணும் யானையேற்றம், குதிரை யேற்றம், வாட் பயிற்சி, விற்பயிற்சி முதலியன உடலோம்பும் துறைக ளல்லவோ? பூரிக்குங் காற்றை இருகாலும் பிடிக்குங் கணக்கறிவாளர் குறிப்பென்னை? இளமை காத்தலன்றோ? உறுப்புச் சிவக்க, உரோமங் கருக்க, புறப்பட்டுத் திரி கின்ற வாயுவை நெறிப்படவுள்ளே ஈர்த்தல் எற்றுக்கு? உடற்கட்டுக் கன்றோ? உடம்பினுள்ளுறு பொருள் கண்டு உடம்பினை ஓம்புங்கள்! உடலை இழுக்கென இகழாதீர்கள்! உடலை வளர்க்கும் உபாய மறிந்து உண்பன உண்டு, உடலை வளர்க்கும் முகத்தால் உயிரை வளருங்கள்!

## கல்வி

'துணை யதுவாய் வருவது தூய நற்கல்வி' யாதலால் கடவுளைக் கல்வி யாகவும் அப்பர் அருளினர்.

> கல்வி ஞானக் கலைப்பொரு ளாயவன்
> செல்வம் மல்கு திருக்கானூ ரீசனை
> எல்லி யும்பக லும்மிசை வானவர்
> சொல்லி டீர்நுந் துயரங் கள்தீரவே

இவ்வாறு தயாமூல தன்மவழிநின்ற அப்பர் அருளியதன் கருத் தென்னை? கல்வி, இறைவன் இலக்கணத்தைப் பயிலநற்றுணை செய்யு மென்பதேயாகும். இறைவனைக் கல்வி யென்றது முகமன். கற்றறிவாளர் கருதிய காலத்துக் கருத்திலுள்ள கண்கொண்டு எல்லா விடத்து முள்ள இறையைக் காண்கின்றனர். கல்லாதவர்கள் அவன் கலப்பறிவ தில்லை. கல்லாதவரைக் கண்டால் நம்மை அஞ்சுமாறு மணிவாசகமும், கல்லா மனிதர் - கயவருலகினில் பொல்லா வினைத்துயரென்று மந்திரமும் அறிவுறுத் தலை நினைந்து, கற்பன கற்று, அக்கற்றதினாலாய பயனைத் துய்மின்! கற் கின்றவாறு செய்மின்! கழிந்தறும் பாவங்கள்!

## குறிக்கோள்

கல்வியால் அறிவு விளங்கப் பெற்ற ஒருவன் குறிக்கோளை இளமை யில் கோலல் நலம். குறியறியாமை பிறவிப் பயனைக்காட்டாமையால், அங்கத் தில் அசைவு காணும் வயதுவரைப் பணிபூண் டொழுகிய அரசர்பெருமான்,

> பாலனாய்க் கழிந்த நாளும் பனிமலர்க் கோதை மார்தம்
> மேலனாய்க் கழிந்த நாளும் மெலிவொடு மூப்பு வந்து

கோலனுப் கழிந்த நாளுங் குறிக்கோளில் லாது கெட்டேன்

என்று இரங்கியது காண்க. இக்கூற்றுக்கொண்டு குறிக்கோள் யாது என்று வினவலாம். அவ் வினவிற்கு அப்பர் அருளுரை கொண்டு விடை இறுப்பல்.

ஊனுக்கும் இன்பம் வேண்டி யுழலாதே
வானுக் கும்வழி யாவது நின்மினே!

இவ் வுரையில் அழிவும் ஆக்கமும் மிளிர்தலைக் கூர்ந்து நோக்கி அவ அவர்கட்கு ஏற்ற முறையில் குறிக்கோளொன்று கொள்க. ஆனல் மேற் கொள்ளும் எவையும் இவ் வடிப்படையின் மேல் எழுவதாக.

## தமிழ்

திருமுறை ஆசிரியர்கள் தமிழால் இறைவனை 'நன்றாய்த் தமிழ்ச் செய்'தவர்கள்; ழகர இனிமையை நன்கு துய்த்தவர்கள். முத்தமிழ் விரகர் பாடலொன்றில் ழகர இனிமை தருவது காண்க.

பாழியுறை வேழம்நிகர் பாழமணர் சூழுமுட லாளர் உணரா
ஏழினிசை யாழின்மொழி யேழையவள் வாழுமிறை தாழு மிடமாங்
கீழ்மைசொள் மேழுலகில் வாழரசு சூழரசு வாழ வரனுக்
காழியசில் காழ்செய வேழுலகில் ஊழிவளர் காழி நகரே.

திருமுறைகளில் பொங்க யாப்பு, சந்தம், சித்திரக் கொழிப்புகளை யென்னென்பேன்? தமிழ்ப் பொழிலென்பனே! தமிழ் மாருதமென்பனே! தமிழும் சமயமும் பூமகளும் பொருளுமென விராவி நிற்பதை உன்னுங்கள்! தமிழ் மலரின் மணமன்றோ 'திருமுறைகள்'! அடங்கன் முறை - தமிழிசை நூல். திருவாசகம் - ஒப்புயர்வில்லாத் தமிழ் வாசகம். திருச்சிற்றம்பலக் கோவை - தமிழின் தொன்மைக் கோவை. திருமந்திரம் - அநுபவ மறை மொழித் தமிழாகமம். ஆலவாயுடையார் திருமுகம் - முதல் தமிழ்த் திரு முகம். திருக்கைலாய ஞானவுலா - தமிழின் ஆதியுலா. திருமுருகாற் றுப்படை - தமிழ்ச் சங்க நூல். திருத்தொண்டர் வரலாறு சொல்புராணம் - தமிழ் வரலாற்று நூல்களில் தலை சிறந்தது. இவைகள் நமக் கறிவிப்ப தென்னை? நந்தம் சமயம் தமிழ்ச் சமயம் என்பதையும், தமிழ் வளர்ச்சி யில் நம் சமயவளர்ச்சி யிருப்பதையும் அறிவிக்கின்றன. தமிழை வளர்க்க, சமயம் வளரும். சமயத்தை வளர்க்க, தமிழ் வளரும். ஆதலின் தமிழையும் சமயத்தையும் இணைத்து ஓம்புங்கள்!

## நூல்

கல்வி கரையிலாதும் கற்பவர் நாள் எல்லையுட்பட்டு மிருத்தலான் தெள்ளிதி னுய்த்து அமைவுடைய நூற்களைக் கலைமாச் செல்வர் கருவூலமாகத் தேடி வைத்தனர். அவையே கற்பனை கடந்த பழம் பாடல்களாம் திரு முறைகள் - சாத்திரங்கள். அவற்றின்பால் நாம் கவலை செலுத்துவ தில்லை. அறவோரை - துறவோரை - அடிகண்மாரை - பாவையாய் நிறுத்திப் படமாய்த்தூக்கி வந்தனை வழிபாடு இயற்றுகிறோம். ஆனல் அவர்தம் நூலொன்றுபற்றி உள்ளக் கிடக்கையை அறிய ஒருப்படுகிறோ மில்லை.

வேட நெறியறியார் வேடம் பூண்டென்பயன்? பிறமொழி சமய நூல்களுக்கு எத்தனை எத்தனை தொகுப்புகள் (Compilations), வகுப்புகள் (Classifications) உரைகள் (Annotations), நுண்மாண்புகள் (Esoterisms), அபிதானங்கள் (Encyclopaedias), அகராதிகள் (Dic-tionaries), சுருக்கங்கள் (Epitomes), ஆராய்ச்சிகள் (Researches) செவ்விய முறையில் மூலநூலின் கருத்தைப் பல படியாகப் பரப்புகின்றன. சிறப்பாக விவிலிய நூலுக்கு இதுவரைப் போந்த வழிநூல்களும் சார்புநூல்களும் கணக்கிறந்தன. அந்நூலுக்கு எல்லா மொழி வாணரும் பலவகை நூற்களை யாத்தனர். அவை பலமுறை அச்சேறிப் பல படிகளை வழங்கி இருக்கின்றன. சுருங்கக் கூறின் பதிப்புகள் வாசகர்களின் கண்ணையுங் கருத்தையுங் கவரும் முறையில் வழங்கப்படுகின்றன. நம்நூல்களின் கதியைச் சிந்திமின்! அன்பர்களே! காலங் கடந்த சமயமென்ச் சைவச் சிறப்புச் சாற்றிச் செம்மாந் திருப்பதின் பயன் யாதுகொல்? அன்பாகமமாம் பெரிய புராணத்திற்கு இற்றை நாள்வரை பாட்டு முதற் குறிப்பும் காணவில்லை. பதிப்போ பல. வெட்கம்! வெட்கம்!! சாதிப்பூசல், சமயப்பிணக்கு, இறுகிய நெஞ்சு, குறுகிய நோக்கு, இன்னபிற பரந்த கொள்கையும், விரிந்த நோக்கு முடைய சைவத்தைச் சுயநலச் சூழலில் ஆழ்த்திவிட்டன. 'அழுக்கினை யோட்டி அறிவினை நிறை'மின்! 'பனுவல் திறங்கற்று நாடெங்கும் நாட்டு'மின்! அரித்து எரிக்கும் நோய்களை நூலின் நந்தாவொளியால் இரிந்தொழியச் செய்மின்! முடிந்த முடிவாக நம் நூல்களை ஓம்புதலால் மொழியையும் நாட்டையும் நல்லாசிரியன்மார்களையும் ஆதரிக்கும் அறிவறிந்த மக்களாவோம்.

## சமயப் பொறை

பலசமயிகள் நடுவண் வாழுநர்க்கு சமயப் பொறை வேண்டுவதே. எவ்வகைச் சமயத்தையும் சோதிக்கில் தொடர்ச்சியில் ஒன்றே. அங்குக் காணும் யாதொரு தெய்வமும் மாதொருபாகனே. 'ஒருவனே தேவன்' என்றும் 'தெய்வம் ஒன்றென் றிரு' என்றும் ஒருமைகண்ட சமயத்தில் பேதித்துப் பிணங்குதல் எற்றுக்கு? விரிவிலா அறிவினோர்கள் வேறொரு சமயம் செய்து எரிவினாற் சொல்லின் அதுவும் பரனுக்கு ஏற்றதென ஏற்க. இறைவன் 'பரவுவாரையும் உடையார் பழித்திகழ்வாரையும் உடையார்' ஆதலின் நம்மை இகழும் எவரையும் இகழற்க.

## கல்வெட்டுக் கலை

தென்னாடு, சென்ற காலத்தின் பழுதிலாத் திறமுடைய கோயில்கள் மலிந்தவிடம். அக்கோயில்களில் எதிர் காலத்தின் சிறப்புக்குக் கற்பனை கடந்த சரித்திரங்கள் கல்மேல் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றின் பயனைப் பெற்றுச் சிறப்பு எய்தாது சிதைத்து வசைகள் பெறுகிறோம். உண்மைகாணும் வேட்கை மிக்கிருக்கும் இந்நாளில் கல்லெழுத்தைப் புறக்கணிக்கும் புன்மை நம்மாட்டுண்டு என்று கூறல் மிகையாகாது. கல்வெட்டுக் கலையின்றேல் திருவிடை வாய்த் தேவாரமேது? சரித்திரக் குறிப்பு ஏது?

பொதுவாக இக்கலை தமிழர்க்கும் சிறப்பாகச் சைவர்க்கும் வேண்டுவதை கண்டு எடுத்துக் காட்டுவல்.

௧. திருநாவுக்கரசர் சரிதம் ௧௪௧௬-வது செய்யுளில் வரும் குணதர வீச்சரம் - இராஜ ராஜீச்சரம், கங்கை கொண்ட சோளீச்சர மென்றாற்போல, அரசன் பெயரால் அமைந்தது. இவ்விடத்துக் காலக்கணக்கரால் கணிக்கப்படும் மன்னன், முதல் மகேந்திரவர்மன். அவன் விருதுகளில் 'குணபரன்' என்பது ஒன்று. இதனால் குணதர மென்பது குணபர மென்றிருக்க வேண்டு மென்பர் சரித்திர அறிஞர்.

௨. புகழ்ச்சோழர் தொண்டின் ௧௩-ம் செய்யுளிலும், இடங்கழியார் வினையின் ௩-ம் செய்யுளிலும் வரும் துலைப்பொன் துளைப்பொன்னு யிருத்தல் வேண்டும். 'விடேல் விடுகு கல்லால் துளைப் பொன் அறுபதின் கழஞ்சரை' - 'சுட்டி வெட்டிச் சூட்டுக்குத் தந்து காச்சாற்றி கை செய்து கழஞ்சிற்பொத்த துளைப்பொன் உரையும் துளையும் வழுவாது' என்பன போன்ற சாசன வரிகளால் இது தெளிவு. இதன்விரி தமிழ்ப் பொழில் முதல் துணர் ௯அ-ம் பக்கம் பார்க்க.

௩. கோட்புலியார் செயல் ௯-வது பாவில் வரும் திருப்படிமற்று, திருப்படி மாற்று யிருத்தல் வேண்டும். கலிக்கம்பர் ௧௯-வது செய்யுளில் திருப்படிமாற்றென இப்பொருளில் வருதலாலும் பலசாசனங்களிலும் இவ்வாறே காண்பதாலும் திருப்படி மாற்றென வழங்குதலே சாலச் சிறப்புடைத்து. இவை ஓரெழுத்துப் பிழையாதலை ஓர்க. இவையன்ன பலப்பல.

சோழர் இராஜாங்க முறைமையில் ஊர்காக்க வாங்கப்பட்ட வரியின் பெயர் பாடிகாவல் என்பர். ௫-வது திருமுறை ௭அ-வது பதிகத்தில் ௨, ௯ பாக்களில் பாடிகாவல் வருவது கொண்டு, நாவுக்கரசர் காலமாகிய பல்லவர் காலத்தும் அது நிலவியது அறிகிறோ மல்லவா? இவையன்ன நுணுகிப் பயில அறிவோம்.

### பணி

முன்னர்ப் பலர் பல பணிகளை வகுத்தனர். அவற்றைக் கால எல்லை நோக்கி விடுத்து நாட்டின் பொருளாதாரம், நம் சமாஜ நிலை, இளைஞர் நிலை முதலியன கருதி என்னைக் கவர்ந்துள்ள பணிகளை உங்கள் முன் கிளத்துகிறேன். அவற்றில் புரிய வல்லவற்றை ஏலுமாறு ஆற்ற வேண்டுகிறேன். பண்முறைத் தேவார நூல்களின் எழுவாய் இறுவாய் இரண்டிலும் காலத்தால் இயைந்த பதிகங்க ளிருக்கின்றன. இடைப்பட்ட ஏனைப்பதிகங்களை யாப்பு வகையிலும், பண் வகையிலும் கூட்டிக்காலம் பற்றி நூல்களை முன் பின் முன்னோர் வைத்தனர். அவைகள் நெறியான சட்டதிட்டங்களின் கீழ் வகுக்கப்பட்டன என்பது தெரியவில்லை. இன்ன பண்ணின் கீழ் இன்ன பண் வர வேண்டியது என்ற நியதியும் காணப்படுமாறில்லை. இப்பண்களைப் பற்றிய விவரமும் தெரியவில்லை. இவ்வகை வகுத்த காலம் யாப்பிலும் பண்ணிலும் நாடு தோய்ந்த காலம் போலும்! சேக்கிழாரது

நூலுக்குமுன் இவ்வகுப்பு ஏற்பட்டது சிந்திக்க உரியது. மூவர் பாடலை வகுக்கப் பெரிய புராணம் ஒரு கருவி நூலாகும். தல முறைப் பதிப்பு யாத்திரைக்கும் தல சரிதத்துக்கும் துணை செய்வது. இப்பதிப்புகளில் பதிகத்தின் மேல் தீட்டியுள்ளபதி, பதிகம் அருளிய இடமா? பாடலில் பயின்ற இடமா? என்பது சிக்கறுக்கப்படவில்லை. கோத்திட்டை - கோவலூர்ப் பதிகம் பரங்குன்றிலும், ஆரூர் ஆதிரைச் சிறப்பான 'முத்துவிதான'ப்பதிகம் புகலூரிலும் அருளியன அல்லவா? நடு நாட்டுத் தலமாகிய இடையாற்றுக்குச் சுந்தரர் பதிகம் ஒன்றே சுட்டப்படுகிறது. இப்பதிகத்தில் இடைமருது விடாது வருகிறது; இது நாட்டுத் தொகை, ஊர்த் தொகை, க்ஷேத்திரக் கோவை போன்று பதிகந் தொகை கூறும் பதிகமாகவும் காணப்படுகிறது. இப்பதிகத்தின் தலைப்பு, சில பிரதிகளில் இடையாற்றுத் தொகையென்று காணப்படுவதை ஈண்டுக் கவனிக்க. சேக்கிழார், சுந்தரர் சரித்திரத்தில் இப்பதியைச் சுந்தரர் வணங்கி வழிபட்டதாகக் கூறினரில்லை. இவ்வித ஐயப்பாடுகள் இருந்தும், அது, பாடல் பெற்ற தலமாக எண்ணப்பட்டு வருகிறது. சம்பந்தர் சுந்தரர் இருவரும் வேள்விக்குடி, துருத்தி இரண்டையும் சேர்த்துப் பாடியிருப்பதால் எத்தலத்திற்கு இப்பதிகங்களைக் கொள்வது? இவையோடு ஒத்த பல ஐயப்பாடுகளைப் பெரிய புராண நூலோடு ஒத்திட்டு ஒற்றுமை வேற்றுமை கண்டு சிக்கறுத்து ஒழுங்கு படுத்தல் வேண்டும். திருவாசகச் சிக்கல்களை மறைமலை யடிகள் எழுத்திற் காண்க. கால வேட்கை கருதிச் சேக்கிழார் வாக்கை ஆதாரமாகக்கொண்டு, மூவர் பதிகங்களைக் காலவரிசையில் (Chronologicalorder) வகுத்துத் தலைப்பில் அருளிய இடம், பண், எண் இட்டுக் குறிப்புடன் கோவை செய்து பண், தல, வரிசைகளை அநுபந்தமாக அமைத்தல் நலம். இவ்வகைப் பதிப்பு மூவரைப் பயிலும் இலக்கிய மாணவர்கட்குப் பெரிதும் பயன்படுவதைச் சமாஜம் கருதி, இம்முறையில் பதிப் பொன்று வெளியிடுமாறு பணிவுடன் விண்ணப்பிக்கிறேன்.

நக்கீரர், கபிலர், பரணர், பட்டினத்தார் இவர்களைப்பற்றிய கருத்து வேறு பாட்டுக் கேள்விகள் வந்தும் வராதனவாக விருக்கின்றன. கோவையார், நம்பியாண்டார் நூல்கள் திருமுறையில் புகுதலைப்பற்றியும் கேள்விகளிருந்து வருகின்றன. திருமுறை கண்ட புராணம், திருப்பதி பதிகக் கோவைகளின் ஆசிரியர் உமாபதியார் என்பது 1911ஆம் வரை நாவலர், பண்டிதர் உள்ளிட்ட பதிப்பாசிரியர்கட்கு ஐயப்பாடே. பெரிய புராணப் பகுதிகளைச் சேக்கிழார் அடிமை, கவின், சரிதம், சரிதை, செய்கை, செயல், தவம், திறம், தொண்டு, தொழில், நலம், நினைவு, பணி, பரிசு, புகழ், வளம், வினையென நுதலியிருக்கப் புராணமென வழக்கில் அடிபடுமாறு செய்வானேன்? இது நிற்க. நூல்களைச் செப்பம் செய்யும்போது செய்யுள் நூல் யாவற்றிற்கும் பா எண்ணிட்டு முதற் குறிப்பு முதலியன வகுத்தல் எப்பதிப்புக்கும் எக்காலத்திற்கும் உதவும். பின் வருவோர் மீண்டும் இவ்வேலையில் காலத்தைப் போக்காது பிற பணியில் காலத்தைப் போக்க உதவுவதை நினைந்து யாவரும் இதனைக் கடைப்பிடிக்குமாறு வேண்டுகிறேன்.

மூவர் பாடலில் சமண சமயிகள் ஒழுக்க நிலையைத் தனியே பிரித்து வகுத்துக் காட்டல் அகச்சான்றில்லாச் சமணர் கழுவேற்றத்திற்குச் சிறந்த கழுவாயாகுமென நினைக்கிறேன். அருவுருவமாக வரும் தேவாரப் பாடல் களை வகையாகக் கோவை செய்தல் சமரச சன்மார்க்கம் விரும்புநர்க்கு ஒரு நல் விருந்தாகும். திருமுறைகளில் குறிப்பிட்ட பொருளைக்காண நூல்முற் றும் துழவித் துழவிப் பார்க்கும் அவசியம் நேர்கிறது. இவ்விதம் பார்க்கக் கால எல்லை அதிகம் வேண்டியிருப்பதால் நூலின் சிறப்பு, பயன்படாது போகிறது. இதனைப் போக்க அபிதானமும் அகராதியும் தனியே வேண் டும். ஒவ்வொரு நான் முடிவினும் இவ்வகைக் கோவை செய்யின், முயற்சி எளிதாகும். சிறுவர்களுக்கெனப் படிப்படியாகப் பாடல்களைத் தாளக் குறிப்புடன் தருதல் ஆசிரியர்கட்கு வழி காட்டியாக (Guide) இருக்கும். 'ஓவியம் உணர்ந்த அறிவாதலின்' ஓவிய வல்லுநர், வர்ணனைக்குத்தகச் சில ஓவியங்கள் தீட்டலாம். படமெடுக்கும் ஆற்றலுடையார் தாராசுரப் பெரிய புராணப் படிமங்களை எடுத்து வெளியிடின், நம் சமயம் சிற்பங்களில் புகுந்து சிறப்பெய்தியதைப் பிறநாடு அறிய நற்றுணை செய்யும். நூல் முகப்புக்குரிய மூவர் யாத்திரை வழிப் படம் வரைதல் தரைச் செலவின் சிறப்புகளை அறியவுதவும். இறைவன் மாட்டுள்ள சின்னங்களின் கதை, புராதனக் கதை இவைகளைத் தொகுத்தெழுதி அவைகளின் தத்துவக் கருத்தையும் நுண் மாணுழைப் புலமைக் கழகத்தார் (EsotericSection) தனியே வெளியிடுதல் வேண்டும். அருவுரைகளை அகர முறைப் படுத்தல் சொற்பொழிவாளர்க் குத் தகுந்த நூலாகும். சமாஜம் அரசாங்க சாசனசாலை அதிகாரிகள் உத் தரவு பெற்றுத்தந்தால், சிவத்தலங்களில் காணப்படும் கல்வெட்டிலுள்ள சமயக் குறிப்புகளை எழுத நினைத்துள்ளேன்; பெரிய புராணத்திற்குக் கல் வெட்டுச் சான்றுகளைக் குறிப்பெடுத்துச் சேர்க்கவும் எண்ணியுள்ளேன். ஆதலால் சாசன சாலையோடு தொடர்பு ஏற்படுத்திக்கொள்ள வேண்டியது சமாஜக் கடமைகளில் சிறந்த ஒன்றாகும்.

**செல்வன் கழலேந்தும் செல்வீர்!**

தீண்டாமையைப் பற்றிய கருத்து சமாஜ உரை நிகழ்ச்சிக் காலத்திற்கு வைத்துக்கொண்டு, இக்கூட்டம் இனிது முடியத் தங்கள் ஆதரவு வேண்டி என் சிற்றுரையை முடிக்கின்றேன். இத்துணைக் காலம் என்னுரைக்குச் செவி சாய்த்த உங்கட்கு என் வணக்கம் உரியதாகுக.

**செந்நெறிச் சைவம் வாழ்க!**
**திருநெறித் தமிழ் வாழ்க!!**

---

[குறிப்பு:—சந்தாவை இம்மாத முதலில் அனுப்புவதாக வாக்களித்த அன்பர்கள் சந்தாவையும், வி. பி. அறிக்கை கிடைத்தவுடன் சந்தாவை மட்டும் மணியார்டர் செய்து, வி. பி. யைத் திருப்பிவிட்டு வி. பி. ரிஜிஸ்தர் செலவைச் சமாஜத்துக்கு நஷ்டப்படுத்திய அன்பர்கள் ஷெ வி. பி. செலவு அணா மூன்றையும் இவ்விதழ் கிடைத்தவுடன் அனுப்ப வேண்டுகிறேன். இங்ஙனம்: காரியதரிசி.]

# சொற்பொழிவுக் குறிப்புகள்

[ச. சச்சிதாநந்தம் பிள்ளை, பி. ஏ., எல். டி.,]

(மலர், 5, இதழ் 11, 280-ம் பக்கத் தொடர்ச்சி)

(v) கல்வி செய்யும் கலக்கம் - ஓயா ஐயமும் ஆராய்ச்சியும். படிப்பின் முடிவின்மை. உயிர்க்குறுதி பயக்கும் சிரிய நூல் சில ஐயந்திரிபறக் கற்று, கற்றவழி நிற்றலால் உண்மை விளங்கல்.

8 இடர்தாண்டும் உபாயம் அன்பு.

(i) (அ) "பத்தித் துறையிழிந் தானந்தவாரி படிவதனல்
புத்தித் தரங்கத் தெளிவ தென்றோ?" (கந்தரலங்காரம்)

(ஆ) "ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா; சுடர்விட்டுளன் எங்கள் சோதி" (சம்பந்தர்)

(ii) இறைவன் திருவடி மறைவிலிருந்து கொண்டு ஐம்புலனை வெல்லலாம்.

(அ) "சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்"

(ஆ) "பற்றுக பற்றற்றான் பற்றினை, அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு" (திருக்குறள்)

(இ) "பொக்கம் பேசிப் பொழுது கழியாதே
துக்கந் தீர்வகை சொல்லுவன் கேண்மினோ
தக்கன் வேள்வி தகர்த்த தழல்வண்ணன்
நக்கன் சேர்நல்லம் நண்ணுதல் நன்மையே". (அப்பர்)

9 ஐம்புலனுக் கடிமைப்பட் டுழல்வோரும் ஊக்கத்துடன் போராடத் தொடங்கலின் பயன்.

(i) "அல்ல லாக ஐம் பூதங்கள் ஆட்டினும்
வல்ல வாறு சிவாயநம என்று
நல்லம் மேவிய நாதனடி தொழ
வெல்ல வந்த வினைப்பகை வீடுமே"

(ii) "முன்னை நான்செய்த பாவ முதலறப்
பின்னை நான் பெரிதும் அருள்பெற்றது
அன்னமார் வயற் கோழம் பத்துள்ளமர்
பின்னல் வார் சடையானைப் பிதற்றியே" (அப்பர்)

10 சைவம் சன்மார்க்கம். சைவ ஒழுக்கம் போற்றல்வேண்டும்.

(i) தற்காலச் சைவர் தம்மொழுக்கம் போற்றாமை.

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவு கின்றாரே !"

ஆர்வத்தை உள்ளே வைத்து ஆன்பூசை செய்தலினவசியம்.

(ii) தற்காலச் சைவர் சிலர் போலிச்சமாசம் பேசித் தமக்கென ஒரு நெறியுங் கொள்ளாது வறிதே மாளல்.

(iii) சமயப்பொறையும் தன் சமய ஒழுகலாற்றில் நிலைத்து நிற்றலும் மாறுபடுவனவல்ல. சைவம் பிறசமயங்கள் மாட்டுக்கொண்டிருக்கும் பரந்த நோக்கு.

(iv) "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ் செய்தே
எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்" (அப்பர்)

"ஓதுசம யங்கள்பொருள் உணரு நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாமல் உளபலவும் இவற்றுள்,
யாதுசமயம் பொருள்நூல் யாதிங் கென்னில்
இதுவாகும் அதுவல்ல எனும்பிணக்க தின்றி,
நீதியினால் இவை யெல்லாம் ஓரிடத்தே காண
நிற்பது யாதொருசமயம் அதுசமயம் பொருள்நூல்,
ஆதலினால் இவையெல்லாம் அருமறையா கமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீ ழடங்கும்"
(சிவஞான சித்தியார்)

11 உலகில் சைவ நெறியைப் பொன்ற விடாது காத்தல் சைவர் சிறப்புக்கடன்.

(i) சைவ நூல்களைப் பேணல்.

(ii) கோயில்கள், மடங்கள், சபைகள் என்னும் சைவ ஸ்தாபனங்களை நன்னிலையிலிருக்கச் செய்தல்—இவற்றின் வாயிலாய்ச் சைவஞானம் பரப்பல்.

(iii) தமிழ் வளர்த்தல்.

12 மன்னுயிர்பா லன்பின்றேல், சைவமில்லை.

(i) "எவ்வுயிரு நீங்கா துறையும் இறைசிவ னென்று
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு" (சைவ சமய நெறி)

(ii) "தாய் தந்தை பல்லுயிர்க்கும் தாமேயாய தலைவனார்" சிவபெருமான். உலக சகோதரத்துவ உணர்ச்சி முதிரப் பாடுபடுக. இதனால் சன்மார்க்க மேற்படி கிடைக்கும்.

# VI

## சைவ சமயம்

1 பல சமயங்கள் உலகில் நிலவும். சைவ சமயம் இவற்றுள் தலையாய தாகவும், அப்பல சமய உண்மைகளையுந் தன்னுட்கொண்டதாக வும், முடிந்த நிலையில் சமயங் கடந்தமோன சமரசமாகவும் விளங் கல்.

(i) பெயர்ப்பொருள் : சைவம்=சிவசம்பந்தம். சமயம்=நன்ருகச் செய்யப் பட்டது. சைவசமயம்=சீவன் சிவ சம்பந்தத்தை யுணர்வதற்கு நன்ருக அமைக்கப்பட்டதொரு மார்க்கம். (சிவம்=மங்கலம்; நன்மை.)

2 மேற் சொன்னதில் முப்பொருட் குறிப்பு ; (i) உணரப்படு பொருள். (ii) உணர்வான். (iii) உணரவொட்டாது மறைத்து நிற்கும் தடை. முறையே, பதி, பசு, பாசம் (இறை, உயிர், தளை), இவற்றினுண் மையை உள்ளவாறுணர்ந்து செய்வன செய்தல் சைவச் சிறப்பு.

3 (i) ஏக சிவம் : உண்மை, அறிவு, ஆனந்த வடிவாகிய முழுமுதற் கட வுட் பொருள், 'மூவராலுமறியொணு முதலாய' சதுர்த்தப் பொருள்.

(ii) 'ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமிலாத' இக்கடவுட் பொருளைச் சிவ னென்னு நாமத்தாற் சிறப்புவகையில் போற்றுவதின் காரணம் : (பிறப்பிறப்பின்றிப்) பூரண மங்களமாயிருக்கும் நலத்தைக் குறிக் கும் சிவப்பெயரை எஞ்ஞான்றும் சிந்தை செய்து செப்பிப் பயி லுவதால் உயிர்க்குச் சிவத்தன்மை வருதல்.

(iii) (அ) சிவத்தின் நிலை. (i) சொரூபம் (ii) தடத்தம். (ஆ) சிவமும் சத்தி யும் பிரிப்பின்றி இயைந்திருத்தல் (உ-ம்) சூரியனும் கிரணமும் (இ) 'காயமோ மாயையன்று, காண்பது சத்திதன்னுல்—அருளே திருமேனி.

4 பல உயிர்கள் : (அ) அவற்றின் 3 நிலை (i) கேவலம்='காருற்ற ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண் டிருந்த' நிலை. (ii) சகலம்=கலைகளோடு கூடியியங்கும் நிலை (iii) சுத்தம்=தநு, கரண புவன போகங்களின் கூட்டுறவால் அடைய வேண்டிய நலத்தை அடைந்த பின் அவற்றைக் கடந்து, நிற்கும் நிலை.

(ஆ) உயிர்களின் முக்கிய இலக்கணம் (i) பற்றுக்கோடின்றி நில்லாமை : பாசத்தையோ அல்லது பதியையோ சார்ந்தே நிற்றல் (ii) சார்ந்த தன் வண்ணமாதல் : "யாதொன்று பற்றின தனியல்பாய் நின்று பந்தமறும் பளிங்கனைய சித்துநீயுன் பக்குவங் கண்டறிவிக்கும் பான்மையேம்யாம்" (தாயுமானுர்.)

5 உலகம்—ஏகதேச விளக்கத்தைத்தரும் மாயையைக் கொண்டு இறைவன் தன் சத்தியால் படைத்துக் காத்தழிப்பது; கோடிக்கணக்கிலுள்ளது; பல் வேறு நிலைகளிலுள்ளது. வான நூல் கூறுவதுணர்க.

6 சிவசம்பந்த இயல்பு: சிவம் உயிர்களோடும் உலகுகளோடும் அத்துவிதமாய் (பொருள் தன்மையில் இவைகளின் வேறுயிருந்தும், இவைகளிலிருந்து பிரிக்க முடியாதபடி) கலந்து நிற்கும். இதனை நாம் உணர்தல் ஞானம்: "பாற்கடல்போல் ஏகசிவம் பன்மீன்போலே பசுக்கள் (சித்தாந்த நிச்சயம்.)

7 (i) இச்சம்பந்தத்தை யுணர்ந்து சிவத்தில் ஒடுங்கி இன்புறும் வழி காட்டியவர் சிவனே. தக்ஷிணாமூர்த்தியும் - அவர் சின்முத்திரைப் பொருளும்.

(ii) சிவனருள் பெற்ற மெய்யடியார்கள் பலர் அவ்வப்போது தோன்றிச் சிவத்தை உணரும் அருண்மார்க்கத்தை விளக்கி வருவது. (iii) தென்னாட்டில் சரித காலத்தில் இம்மார்க்கத்தைப் பிரகாசப் படுத்தியவர்கள் நால்வர் சிவஞான பரம்பரை நசியாது இருந்து வருதல்.

8 (i) சைவ நன்னெறியடைதற்குரியோர் சகல ஆன்மாக்களும். தேசம், சாதி, குலம், நிறம், மொழி இவைகளால் சைவம் தடைப்படுவதன்று: "ஆரேனும் அன்பு செயின் அங்கே தலைப்படுங்காண் ஆரேனும் காணு அரன்" என்னும் திருவாக்கும் பெரிய புராணத்தில் முக்கியமாய் அப்பாலு மடிச்சார்ந்தார், சாக்கியநாயனர் புராணங்களும் பிற நாயன்மார் மரபு வேறுபாடுகளும் உய்த்துணரற்பாலன.

(ii) உண்மைச் சைவம். உலகில் பல வேறு சமயங்களினுள்ளும் புகுந்து நிற்பது. ஆன்மபக்குவ முதிர்ச்சிக்கேற்பச் சமயங்களில் உண்மை விளக்கம் மிகுந்தும் குறைந்தும் அமைந்து கிடைத்தல். எல்லாச் சமயங்களிலும் உண்மையே உயிர் நாடியாய் இருத்தல் சைவத்தின் சமயப் பொறைக்குக் காரணமாதல்.

9 (அ) சமயத்தின் பகுதிகள் (i) தத்துவக் கோட்பாடு (ii) சடங்கு அநுட்டானம் (iii) சமய அமைப்புகள் (iv) சமய உண்மை அநுபவம்.

(ஆ) (i) மேல் 3 முதல் 6 வரையில் சுட்டப்பட்டது. (ii) சிவாகமங்களில் விதிக்கப்பட்டுள்ளது. இந்நாட்டிற்குச் சிறப்பு வகையில் விதிக்கப்பட்டவை: விபூதிருத்திராக்க தாரணமும் சிவமந்திரமும் பொருளாய்க் கொண்டு படிமுறையில் உயர்ந்து செல்லும் சிவதீக்ஷை. நான்கு பாதங்கள் சரியைகிரியை யோக ஞானம் - ஒன்றினொன்று முதிர்ந்ததாயிருக்கு முறைமை. (iii) திருக்கோயில்களும் சைவ மடங்களும், (iv) சிவாநுபூதிச் செல்வர்கள் பரம்பரையில் விளங்குவது.

10 (அ) சைவரில் இரண்டுதரம்: (i) உண்மைச் சைவர்: சிவசம்பந்தத்தைத் தம்மனுபவத்தில் திருவருட்கண் கொண்டு கண்ட சிவ

ஞானிகள் (ii) உபாயச் சைவர் : அந்நிலையடைய நான்குபடிகளில் தமக்குரிய தொன்றில் நின்று முயன்றுகொண்டிருப்போர்.

(ஆ) பெரும்பாலோராகிய உபாயச் சைவர் கடமை : தம்மைச் சுத்திசெய்துகொள்ள (i) இயம நியமப்படி நிற்றல் (ii) சிவகாருணியத்தால் சிவபத்தி பெருக்கல். (iii) இந்நாட்டினராயின், சிவசின்னம் பூண்டு சிவமந்திர மோதி, மெய்யன்போடு சிவமூர்த்தியை வழிபட்டு வரல். (iv) திருக்கோயிலில் வழிபடுதலும் அநுபூதிமான்களருளிய சைவ நூலைப்பொருளுணர்ந்தோதி உணர்ந்த துரைத்தலும்.

11 நம்நாட்டில் தற்காலம் சைவரடைந்திருக்கும் சிறுமை: 9(அ)வில் கூறியவை சைவ மக்கள் பெரும்பாலோர் வாழ்வில் சுருங்கி வருதல்.

12 சைவ சமயக் கடமை :

(i) 10-ல் கூறியபடி தம்மொழுக்கத்தையும் வழிபாட்டையும் வளர்த்து, இறைவனருளுக்குச் சிறந்த கொள்கலங்களாதற்கு இடைவிடாது முயலுவது.

(ii) மன்னுயிர்த்தொண்டு : எளியோர்க்கிரங்கி இயல்வது தருதல் ; நாட்டுப்பற்று, தாய்மொழிப்பற்று, சமயப்பற்று—இவற்றின் அளவும் அவசியமும்.

(iii) சைவர் சிறப்புக் கடமை : சைவம் பேணல், சைவ நலங்களைச் சைவரிடையும் பிறரிடையும் அன்போடு பரப்பல்.

(iv) சாதனங்கள்—திருக்கோயில்களை மீண்டும் சிவப்பொலிவுடையனவாக்கல் ; சைவ மடங்களின் சீர்திருத்தம் ; சைவ சபைகளை யாண்டும் நிறுவிச் சைவம் வளர்த்தல் ; சைவ சித்தாந்த மகாஸமாஜத்திற் சேர்ந்து சிவத்தொண்டாற்றல்.



# திருஞானசம்பந்தர் பதிக அமைப்பு

[ஈ. ந. தணிகாசல முதலியார், பி. ஏ. பி. எல்.]

## 1. சம்பந்தர் தேவாரத்தமிழ் - தனித்தமிழ்

நமது தமிழிலக்கியத்தில் உள்ள எல்லா நூல்களினும் செந்தமிழ் நடையில் மிக்கச் சிறப்பு வாய்ந்தன தேவாரத் திருமுறைகளாம். அவற்றுள், 7-ம் திருமுறையாகிய நம்பியாரூர் தேவாரம், "வண்டமிழ் மாலை" என வன்றொண்டரே கூறுகின்றார். தாயுமானவர் இத்தமிழை,

> " வடியிட்ட சேந்தமிழின் அருமையிட் டாரூரில் அரிவையோர் பரவை வாயில்
> அம்மட்டும் அடியிட்டு நடைநடந் தருளடிகள் "

எனச் சிவபெருமானைப் பாடுவதும் காண்க. சிவபெருமானைத் தனக்கு வேண்டுவன தாராவிட்டால் "ஒருபொழுதும் அடியெடுக்க வொட்டேன்" "கன்னையன் கொடும்பாடன் என்றுரைக்க வேண்டா" வென்று திருநாகைக்

காரோணத்தில் சுந்தரர் பாடிய பதிகத்திலும் காண்க. எனெனில், அச் செந்தமிழ்த் திறம், சிவபெருமானுக்கும் பயன்படுவதுபோல்,

“செந்த மிழ்த்திறம் வல்லிரோ ? செங்கணர வமுன்கையி லாடவே
வந்து நிற்குமிதென் கொலோ ?”

என்று திருப்பைஞ்ஞீலி திருப்பதிகத்தில் பாடியது காண்க.

இத்தகை வன்றொண்டர் செந்தமிழ் எவ்விடத்தினின்று இவர் பெற்றாரெனில், அதற்கு அவரே,

“நல்லிசை ஞான சம்பந்தனும் நாவுக் கரசரும் பாடிய நற்றமிழ்மாலை
சொல்லிய வேசொல்லி யேத்துகப் பானை”

என்று திருவலிவலம் திருப்பதிகத்தில் கூறுகின்றார். ஆகையால் நம்பி யாரூரர் செந்தமிழ் திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர் தேவாரப்பதிகங்களின் தமிழ் என்பது அமையும்.

“நாவின்மிசை யரையன்னொடு தமிழ்ஞானசம் பந்தன்
யாவர்சிவ னடியார்களுக் கடியானடித் தொண்டன்
தேவன்திருக் கேதாரத்தை யூரன்னுரை செய்த
பாவின்றமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே”

என்னும் பாசுரத்தையும் நோக்குக.

தேவாரத் திருமுறைகளில் முதல் ஆறு திருமுறைகளின் சாரமே, எழாம் திருமுறையாகும். எவ்விஷயத்திலும், தமிழ் நடையிலும், எழாம் திருமுறை சம்பந்தர், அப்பர் திருமுறைகளைப் பின் பற்றியும், அவற்றைக் கடைந்தெடுத்த நவநீதம் போலும் விளங்கும். ஆகவே அதற்கு அடிப்படையான இவ்விருவர் தேவாரச் சொற்றொடர்களைச் சிறிது கவனிப்போமாக.

திருஞான சம்பந்தரிடம் அதிக அன்பும் பக்தியும் வாய்ந்தவர் அப்பரென்பது, அவர் தேவார அகச்சான்றுகளாலும், சேக்கிழார் திருவாக்காலும் அறியலாகும். புகலி வேந்தர் முத்துச் சிவிகையைத் தானும் தூக்கி இன்பம் பெற, அப்பர் யாருமறியாது அவர் பல்லக்கைச் சுமந்ததைச் சேக்கிழார் மிகவும் அழகாக வர்ணிக்கின்றார். அப்பர் மனப்பூர்வமாய்த் திருஞான சம்பந்தர் பல்லக்கைச் சுமப்பது, உலகத்திலுள்ள எல்லாப் பேறினும் சிறந்ததென்று எண்ணியிராவிடில், “நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம், நரகத்திலிடர்ப்படோம்” என்று கூறியவர், ஒருபோதும் அவ்வாறு நிகழ்த்தார். சிவபெருமான் திருஞான சம்பந்தரைத் தன் மகனென எண்ணி அவருக்கு எல்லாச் சிறப்பீந்தமையும், அவர் தமிழ், தம் செந்தமிழினுஞ் சிறந்ததாய் அழைக்கப்பட்டதென்றும், அப்பர் நம்பியிருந்ததை, அவர் பதிகத்திற் காணலாம் :—

திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்பு பாடி அடைப்பித்தா ருள்நின்றார்

மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே !

—திருவாய்மூர் - திருக்குறுந்தொகை - 8.

அவ்வாறு அப்பர் தமது திருப்பதிகத் தமிழினும் சிறந்த செந்தமிழ் திருஞான சம்பந்தர் தமிழ் என்பதற்கு, திருஞான சம்பந்தர் தேவாரத்தி லும் அகச்சான்றுகளும் அவ்வாறே காட்டுகின்றன. புகலி வேந்தர் தம் தமிழைப்பற்றிப் பின்வரும் செய்யுட்களில் செப்பிய தொடர் மொழிகளை உற்று நோக்குக :—

திருஞான சம்பந்தர் தாம் பாடியது யாவும் அரிய தமிழ் மொழிகளே என்பதற்கு அவர் திருக்கடைக்காப்புச் செய்யுட்கள் :—

(1) " கற்று முற்றினுர் தொழும் கழும்மலத் தருந்தமிழ்
சுற்று முற்று மாயினுன் அவன்பகர்ந்த சொற்களால்
பெற்றமொன் றுயர்த்தவன் பெருந்திருத்தி பேணவே
குற்ற முற்று மின்மையிற் குணங்கள்வந்து கூடுமே."

(2) " நலந்தரு புனற்புகலி ஞானசம் பந்தன்
கலந்தவர் கருப்பறியன் மேயகட வுள்ளைப்
பலந்தரு தமிழ்க்கிளவி பத்துமிவை கற்று
வலந்தரு மவர்க்குவினை வாடலெளி தாமே."

(3) " கலவ மஞ்ஞை யுலவுங்கரு காவூர்
நிலவு பாடலுடை யான்றன நீள்கழல்
குலவு ஞானசம் பந்தன செந்தமிழ்
சொலவ லாரவர் தொல்வினை தீருமே."

(5) ஈனஞானிக டம்மொடு விரகனே யேறுபல்பொருள் முத்தமிழ் விரகனே
ஆனகாழியுண் ஞானசம் பந்தனே யாலவாயினின் மேயசம் பந்தனே
ஆனவானவர் வாயினு ளத்தனே அன்பரானவர் வாயினு ளத்தனே
நானுரைத்தன செந்தமிழ் பத்துமே வல்லவர்க்கில்லை நற்றமிழ் பத்துமே.

முத்தமிழ் விரகரான ஆளுடைய பிள்ளையார் தாம் பாடியது தமிழே யன்றி வேறே மொழி தமது பதிகத்திலில்லை யென்பது ஆங்காங்குத் திருக்கடைக்காப்புச் செய்யுட்களில் வற்புறுத்திக் கூறுகின்றார். இவர் வட மொழி அறியாதவரன்று; அம்மொழியைப் பேணுதவருமன்று. இவை முறையே பின்வரும் பாசுரங்களிற் காண்க :—

நற்றமிழ் ஞானசம் பந்த னுன்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய.
அற்றமில் மாலையீ ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராவரே.

—பஞ்சாக்கரத் திருப்பதிகம் - 11.

" மைம்மலர்க் கோதை மார்பின ரெனவு
மலைமக ளவளொடு மருவின ரெனவும்
செம்மலர்ப் பிறையும் சிறையணி புனலும்
சென்னிமே லுடையரெஞ் சென்னிமே லுறைவார்

